

## பாரதி கண்ட








# பாரத சமுதாயம்









விலை 10 காசு.

தமிழ்நாடு அரசாங்கச் செய்தித்துறை
செறியாளர் வெளியிட்டது.




முன்னுரை



அந்நிய ஆட்சியின் கீழ், நாட்டில் அடிமைத் தனமும், அச்சமும், அவலமும் நிலவிய காலத்தில் மகாகவி பாரதியார் தோன்றினர். தமது வீரம் செறிந்த பாட்டுக்களால், தேசியக் கனலை மூட்டிவிட்டு, மக்களிடையே வீராவேசத்தையும் சுதந்திர உணர்ச்சியையும் வளர்த்தார். இமயம்

முதல் குமரி வரை இந்தியா ஒரே தேசம் என்று அன்றோரும் சான்றோரும் வழி வழியாகப்போற்றிய கருத்துக்களுக்குப் புதிய வலிவினை அளித்தார். பாரத நாட்டின் ஒற்றுமையையும், தமிழின் சிறப்பையும், தமிழர் வாழ்வின் மேன்மையையும் மலைவிளக்காக உயர்த்திக் காட்டினார்.

சுதந்திர நவபாரதம் அமைக்கத் தொடங்கிய சக்திகளுக்குப் புதிய உயிர்ப்பினைக் கொடுத்தவர் பாரதியார். விடுதலை பெற உதவியது போலவே, ஒற்றுமையை வளர்க்கவும் பெற்ற சுதந்திரத்தைப் போராடிக் காக்கவும் வலிமை அளிப்பவை அவரது பாடல்கள். தெருவெங்கும் பாரதி பாடல்கள் முழங்குவதாக!

நெறியாளர், தமிழ்நாடு அரசாங்கச் செய்தித்துறை



# பொருள் அடக்கம்



பாரத பூமி பழம் பெரும் பூமி;

நீரதன் புதல்வர்;

இந் நினைவகற்றதீர்





## வந்தே மாதரம்

வந்தே மாதரம் என்போம் – எங்கள்
மாநிலத்தாயை வணங்குதும் என்போம்.
(வந்தே)

*  *  *

ஒன்றுபட்டால் உண்டு வாழ்வே–நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும்
தாழ்வே ;

நன்றிது தேர்ந்திடல்வேண்டும் – இந்த
ஞானம் வந்தாற்பின் நமக்கெது
வேண்டும் ? (வந்தே)

எப்பதம் வாய்த்திடு மேனும் – நம்மில்
யாவர்க்கும் அந்த நிலைபொது வாகும்;

முப்பது கோடியும் வாழ்வோம் – வீழில்
முப்பதுகோடி முழுமையும் வீழ்வோம்.
(வந்தே)



# நாட்டு வணக்கம்



எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்ததும் இந்நாடே – அதன்

முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து
முடிந்ததும் இந்நாடே – அவர்

சிந்தையில் ஆயிரம் எண்ணம் வளர்ந்து
சிறந்ததும் இந்நாடே – இதை

வந்தனை கூறி மனத்தில் இருத்தி, என்
வாயுற வாழ்த்தேனோ? – இதை

வந்தே மாதரம், வந்தே மாதரம்’
என்று வணங்கேனோ?



# பாரத நாடு

பாருக்குள்ளே நல்லநாடு – எங்கள்
பாரத நாடு.

**சரணங்கள்**

ஞானத்தி லேபர மோனத்திலே – உயர்
மானத்தி லேஅன்ன தானத்திலே
கானத்தி லேஅமு தாக நிறைந்த
கவிதையி லேஉயர் நாடு – இந்தப்
(பாரு)

தீரத்தி லேபடை வீரத்திலே – நெஞ்சில்
ஈரத்தி லேஉப காரத்திலே,
சாரத்தி லேமிகு சாத்திரங் கண்டு
தருவதி லேஉயர் நாடு – இந்தப்
(பாரு)

நன்மையி லேஉடல் வன்மையிலே –
செல்வப்
பன்மை யிலேமறத் தன்மையிலே
பொன்மயி லொத்திடு மாதர்தம் கற்பின்
புகழினி லேஉயர் நாடு – இந்தப்
(பாரு)

ஆக்கத்தி லேதொழில் ஊக்கத்திலே-புய
வீக்கத்தி லேஉயர் நோக்கத்திலே
காக்கத் திறல்கொண்ட மல்லர்தம்
சேனைக்
கடலினி லேஉயர் நாடு – இந்தப்
(பாரு)







# எங்கள் நாடு

மன்னும் இமய மலையெங்கள் மலையே
மாநில மீதிது போற்பிறி திலையே!
இன்னறு நீர்க்கங்கை யாறெங்கள்
யாறே
இங்கிதன் மாண்பிற் கெதிரெது
வேறே?



பன்னரும் உபநிட நூலெங்கள் நூலே
பார்மிசை யேதுஒரு நூல்இது
போலே?
பொன்னொளிர் பாரத நாடெங்கள்
நாடே
போற்றுவம் இஃதை எமக்கிலை ஈடே.



மாரத வீரர் மலிந்த நன்னாடு
  மாமுனி வோர்பலர் வாழ்ந்த
      பொன்னாடு ;

நாரத கான நலந்திகழ் நாடு,
  நல்லன யாவையும் நாடுறு நாடு ;

பூரண ஞானம் பொலிந்த நன்னாடு,
  புத்தர் பிரான் அருள் பொங்கிய நாடு ;
பாரத நாடு பழம்பெரு நாடே
  பாடுவம் இஃதை எமக்கிலை ஈடே.



## எங்கள் தாய்

தொன்று நிகழ்ந்த தனைத்தும்
உணர்ந்திடு
சூழ் கலை வாணர்களும் – இவள்
என்று பிறந்தவள் என்றுண ராத
இயல்பின ளாம்எங்கள் தாய்

* * *

முப்பது கோடி முகமுடை யாள் உயிர்
மொய்ம்புற வொன்றுடை யாள் –
இவள்
செப்பு மொழிபதி னெட்டுடை யாள்,
எனிற்
சிந்தனை ஒன்றுடை யாள்.

* * *

அறுபது கோடி தடக்கைக ளாலும்
அறங்கள் நடத்துவள் தாய் – தனைச்
செறுவது நாடி வருபவ ரைத்துகள்
செய்து கிடத்துவள் தாய்.



# பாப்பா பாட்டு

ஓடி விளையாடு பாப்பா! – நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா!

கூடி விளையாடு பாப்பா! – ஒரு
குழந்தையை வையாதே பாப்பா!

*    *    *

வடக்கில் இமயமலை பாப்பா! – தெற்கில்
வாழும் குமரிமுனை பாப்பா!

கிடக்கும் பெரியகடல் கண்டாய் – இதன்
கிழக்கிலும் மேற்கிலும் பாப்பா!





## பாரத சமுதாயம்

பாரத சமுதாயம் வாழ்கவே! –
வாழ்க வாழ்க!
பாரத சமுதாயம் வாழ்கவே! –
ஜயஜயஜய!
(பாரத)

**அனுபல்லவி**

முப்பது கோடி ஜனங்களின் சங்கம்
முழுமைக்கும் பொது உடைமை
ஒப்பி லாத சமுதாயம்
உலகத் துக்கொரு புதுமை – வாழ்க
(பாரத)

**சரணங்கள்**

மனித ருணவை மனிதர் பறிக்கும்
வழக்கம் இனியுண்டோ?
மனிதர் நோக மனிதர் பார்க்கும்
வாழ்க்கை இனி யுண்டோ? – புலனில்
வாழ்க்கை இனி யுண்டோ?
நம்மி லந்த
வாழ்க்கை இனி யுண்டோ?



இனிய பொழில்கள் நெடிய வயல்கள்
எண்ணரும் பெருநாடு;
கனியும் கிழங்கும் தானியங்களும்
கணக்கின்றித் தரு நாடு – இது
கணக்கின்றித் தரு நாடு –
நித்த நித்தம்
கணக்கின்றித் தரு நாடு – வாழ்க!
(பாரத)



எல்லாரும் ஓர்குலம் எல்லாரும் ஓரினம்
எல்லாரும் இந்திய மக்கள்,
எல்லாரும் ஓர்நிறை எல்லாரும் ஓர்விலை
எல்லாரும் இந்நாட்டு மன்னர் – நாம்
எல்லாரும் இந்நாட்டு மன்னர் – ஆம்
எல்லாரும் இந்நாட்டு மன்னர் –
வாழ்க! (பாரத)

# செந்தமிழ் நாடு

செந்தமிழ் நாடெனும் போதினிலே –
இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே –
எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே – ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே.
(செந்தமிழ்)

நீலத் திரைக்கட லோரத்திலே – நின்று
நித்தம் தவஞ்செய் குமரிஎல்லை – வட
மாலவன் குன்றம் இவற்றிடையே–புகழ்
மண்டிக் கிடக்குந் தமிழ்நாடு
(செந்தமிழ்)



கல்வி சிறந்த தமிழ்நாடு – புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு – நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின் – மணம்
பாரெங்கும் வீசுந் தமிழ்நாடு.
(செந்தமிழ்)

வள்ளுவன் தன்னை உலகினுக்கே–தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு –
நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென்றோர்–மணி
யாரம் படைத்த தமிழ்நாடு.
(செந்தமிழ்)



# சுதந்திரப் பள்ளு

**பல்லவி**

ஆடு வோமே – பள்ளுப்
பாடு வோமே;

ஆனந்த சுதந்திரம்
அடைந்துவிட் டோமென்று
(ஆடுவோமே)

*  *  *

எங்கும் சுதந்திரம்
என்பதே பேச்சு – நாம்

எல்லோரும் சமமென்பது
உறுதி யாச்சு;



சங்குகொண்டே வெற்றி
ஊதுவோமே – இதைத்

தரணிக்கெல் லாமெடுத்து
ஓது வோமே. (ஆடுவோமே)

*  *  *

உழவுக்கும் தொழிலுக்கும்
வந்தனை செய்வோம் – வீணில்

உண்டுகளித் திருப்போரை
நிந்தனை செய்வோம்.

விழலுக்கு நீர்பாய்ச்சி
மாய மாட்டோம் – வெறும்

வீணருக்கு உழைத்துடலம்
ஓய மாட்டோம். (ஆடுவோமே)






# காந்தி பஞ்சகம்

வாழ்க நீ! எம்மான் இந்த வையத்து
நாட்டிலெல்லாம்
தாழ்வுற்று வறுமை மிஞ்சி விடுதலை
தவறிக் கெட்டுப்
பாழ்பட்டு நின்ற தாமோர் பாரத
தேசந் தன்னை
வாழ்விக்க வந்த காந்தி மஹாத்ம!
நீ வாழ்க! வாழ்க!
அடிமை வாழ்வகன்றிந் நாட்டார்
விடுதலை யார்ந்து, செல்வம்,
குடிமையி லுயர்வு கல்வி, ஞானமும்கூடி
யோங்கிப்
படிமிசைத் தலைமை யெய்தும் படிக்
கொரு சூழ்ச்சி செய்தாய்!
முடிவிலாக் கீர்த்தி பெற்றாய்!
புவிக்குளே முதன்மை யுற்றாய்!



Printed by Prasad Process (P) Ltd., Madras-26

